# UNIVERSAL PRAYER

O! Adorable Lord of mercy and love
Salutations and Prostrations unto Thee
Thou art Satchidananda
Thou art Omnipresent, Omnipotent and Omniscient
Thou art the indweller of all beings

Grant us an understanding heart
equal vision, balanced mind
Faith, Devotion and wisdom
Grant us inner spiritual strength
To resist temptations and to control the mind
Free us from egoism, lust, greed, anger,
hatred, and jealousy
Fill our hearts with divine virtues

Let us behold Thee in all these names & forms
Let us serve Thee in all these names & forms
Let us ever remember Thee
Let us ever sing Thy glories
Let Thy name be ever on our lips
Let us abide in Thee for ever and ever

- Sri Swami Sivananda

---

Guru Smriti (குருஸ்மிருதி) is the Tamil translation by Prof. T.K. Narayanan of the original in English by H.H. Sri Swami Devananda Maharaj and published on the occasion of 112th Sivananda Jayanti by Madurai Sivananda Satsang Bhavan for free distribution among devotees.

*FIRST EDITION : SEPTEMBER 1999*

9-1

# குரு ஸ்மிருதி

## குருதேவர் ஸ்ரீசுவாமி சிவானந்தரைப் பற்றிய சில நினைவுகள்

ஆங்கில மூலம்
சுவாமி தேவானந்தா

தமிழாக்கம்
பேராசிரியர் டி.கே. நாராயணன்




வெளியீடு
சிவானந்த ஸத்ஸங்க பவன்
70,பேச்சி அம்மன் படித்துறை
மதுரை – 625 001 (தமிழ்நாடு)
Ph: 0452 – 740098

# குருதேவர் ஸ்ரீசுவாமி சிவானந்த மகாராஜைப் பற்றிய சில நினைவுக் குறிப்புகள்

ஸ்ரீசுவாமி தேவானந்தா

இந்த மகிழ்ச்சிகரமான வைர விழாக் கொண்டாட்ட சமயத்தின் போது குருதேவருக்கு மிக எளிய முறையில் எனது உளமார்ந்த நன்றியையும், சிரத்தையையும், பக்தியையும் தெரிவிக்கும் விதத்தில் பூஜ்ய ஸத்குருதேவரை நினைவு கூர்வது மிகவும் பொருத்தமாயிருக்கும் என்று கருதுகிறேன்.

ஸாது மகாத்மாக்கள் தங்கள் ஜீவிய காலத்தில் எவ்விதம் அவர்களது அன்றாட வாழ்க்கையைக் கழித்தனர் என்பது போன்ற விஷயங்களை தெரிந்து கொள்வதில் பொதுவாக ஜனங்கள் பேரார்வம் காட்டுகின்றனர். இத்தகைய மஹாத்மாக்களின் நல்ல குணங்களைப் பின்பற்ற அவர்களும் விரும்புகின்றனர். குருதேவரது ஜீவிய காலத்தில் அவருடன் இருக்க எனக்குக் கொடுத்து வைத்தது நான் செய்த பெரும் பேறாகும், அந்த அருமையான நினைவுகள் இப்பொழுதும் என் மனத்தில் பசுமரத்தாணிபோல் நன்கு பதிந்து நிற்கின்றன. இப்பொழுதுள்ள குருதேவரின் சிஷ்யர்கள், பக்தர்கள் மற்றும் எண்ணற்ற சீடர்களுடன் அந்த நினைவுகளைப் பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன். அதன் விளைவுதான் உங்கள் முன் நான் படைக்கும் இந்த ஞான யக்ஞப் பிரஸாத வெளியீடாகும்.

# குருதேவர் ஸ்ரீசுவாமி சிவானந்த மகாராஜ் அவர்களது வாழ்வில் ஒரு நாள்

(ஸ்ரீ சுவாமி தேவானந்தா)

ஒரு மகாத்மா, துறவி அல்லது மஹாபுருஷரின் ஒரு குறிப்பிட்ட அன்றாட வாழ்க்கையைப் பற்றி அறிந்து கொள்ள பொதுவாக மக்கள் பெரிதும் ஆர்வமாக உள்ளனர். எத்தகைய கட்டுப்பாட்டை அவர் மேற்கொண்டிருந்தார், அவர் என்ன சாப்பிட்டார், அவர் எப்படி நடந்து கொண்டார் என்பன போன்ற விஷயங்களைத் தெரிந்து கொள்ள அவர்கள் விரும்புகின்றனர். இத்தகையதொரு ஆர்வம் அசாதாரணமானது அல்லவே அல்ல, ஏனெனில் கீதையில் தெரிவிக்கப்பட்டுள்ளது போல அர்ஜூனன் கூட ஸ்திதப்ரக்ஞன் அல்லது ஜீவன்முக்தனைப் பற்றித் தெரிந்துகொள்ள பெரிதும் விரும்பினான். குருதேவர் சிவானந்த மகாராஜ் அவர்களுடைய பல சீடர்களும் பக்தர்களும் அவரது தினசரி வாழ்க்கை முறையைப் பற்றித் தெரிந்து கொள்ள விரும்புகின்றனர்.

பொதுவாக குருதேவர் அதிகாலை 3.30 முதல் 4.30க்குள் பிரம்ம முகூர்த்தத்தில் எழுந்துவிடுவார். அவரது காலைக் கடன்களை முடித்துக் கொண்டு அவர் காலை 6.30 மணி வரை அவரது சாதனையைச் செய்வார்.

கோடை காலத்தில், அவரது சாதனைக்குப் பிறகு கொஞ்சம் பழச்சாறு அருந்துவார். அதன் பிறகு 6.30 மணிக்குப் பின் வைர விழா அறைக்கு தமது அலுவலக காரியத்தை பார்க்கச் சென்றுவிடுவார். ஜயகணேச கீர்த்தனைக்குப் பிறகு தமது பணியை

அவர் தொடங்குவார். அலுவலகத்தில் அவர் சுமார் 1 1/2 முதல் 2 மணிநேரம் செலவிடுவார். முதலில் அவர் வெளியே அனுப்ப வேண்டிய கடிதங்களில் கையெழுத்திடுவார். அதன்பின் பல பக்தர்களுக்கு அனுப்பப்படும் இலவச புத்தகப் பாக்கட்டுகளைப் பார்வையிடுவார். ஒரு குறிப்பிட்ட முகவரி அல்லது பார்சல் சரியானது என்று அவர் சொல்லும் முறை ஓம் தத்ஸத் என்பதுதான். முழுக்க முழுக்க அலுவலகப் பணியைப் பார்ப்பதற்கான நேரம் வந்தவுடன் ஆசிரம செயலாளர் அல்லது பல்வேறு துறைகளின் தலைவர்கள் கொண்டுவரும் அலுவலக கடிதங்களில் கையெழுத்திடுவார். அலுவலக வேலையை முடித்த பிறகு அங்கே கூடியிருக்கும் பக்தர்களிடமும் பார்வையாளர்களிடமும் குருதேவர் உரையாடுவார். அவரவர் தகுதிக்கும் தேவைக்கும் ஏற்ப குறிப்பிட்ட மொழியில் அவர் புத்தகங்களை வழங்குவார். இதைத் தொடர்ந்து ஒரு சிறிய ஸத்ஸங்கம் நிகழும், பக்தர்களைக் கீர்த்தனை, பஜனை பாடுமாறு அவர் வேண்டிக் கொள்வார். அல்லது தாமே பாடுவார். சிறிது நேரம் உரை நிகழ்த்துவார். இதற்குள் விசுவநாத் மந்திரிலிருந்து பிரசாதத்தை எவராவது ஒருவர் கொண்டு வருவார். அதை குருதேவர் அனைவருக்கும் விநியோகம் செய்வார். குருதேவருக்கு மிகவும் பிடித்த பாடலான..."

*கடவுளுடன் நாளைத் தொடங்குங்கள்*
*கடவுளுடன் நாளைத் தொடருங்கள்*
*கடவுளுடன் நாளை நிரப்புங்கள்*
*கடவுளுடன் நாளைப் பூர்த்தி செய்யுங்கள்!,*

என்ற பிரார்த்தனையுடன் ஸத்ஸங்கம் நிறைவுறும், குருதேவருக்கு பிரார்த்தனைதான் அவரது உயிர் மூச்சாக அமைந்தது. எந்த வேலையையும் அவர் பிரார்த்தனை இல்லாமல் தொடங்கமாட்டார் அல்லது முடிக்கமாட்டார். எப்பொழுதாவது குருதேவரைச் சூழ்ந்துள்ளவர்கள் வெட்டிப் பேச்சு அல்லது வீண் பேச்சில் ஈடுபட்டால்

குருதேவர் தமக்குள், 'ராம் ராம் ராம்' என்று சொல்லிக் கொள்வார். அது ஒரு எச்சரிக்கையாக அமையும். உடனே அங்கே அமைதி நிலவும்.

குருதேவர் தமது குடீரிலிருந்து கிளம்பும் பொழுதும், அதுபோல அலுவலகப் பணி முடிந்து திரும்பும் பொழுதும் அவருடன் பக்தர்கள் உடன் வருவார்கள். நடந்து வரும் பொழுதும் அவர் பகவந் நாமத்தை உச்சரித்துக் கொண்டேயிருப்பார். அலுவலகப் பணி முடிந்து அவர் தமது குடீருக்குள் செல்லுவதற்குமுன் அவருடன் வந்த பக்தர்கள், 'ஸத்குரு பகவான் கீஜய்' என்று சொல்லி அவரிடமிருந்து விடை பெறுவார்கள். உடனே குருதேவர் 'சிஷ்ய பகவான் கீஜய்' என்று அதற்குப் பதில் சொல்லுவார்.

தமது குடீரினுள் நுழைந்ததும் தமது காலைச் சிற்றுண்டியை அருந்துவதற்கு முன் அவர் சிறிது ஓய்வு எடுத்துக்கொள்ளுவார். அவரது காலைச் சிற்றுண்டி மிகவும் எளிமையானது, கொஞ்சம் உப்புமா அல்லது இட்லி, சில பழங்கள் அல்லது ஒரு தோசையும் ஒரு கோப்பை பாலும். சிறிது ஓய்வு எடுத்து விட்டு அவர் மீண்டும் எழுத ஆரம்பித்து விடுவார்.

அவரது மதிய உணவு அவ்வப்பொழுது மாறுபடும். அடிக்கடி பக்தர்கள் குருதேவருக்கு பாத பூஜை செய்வார்கள். பாத பூஜையின் முடிவில் ஒரு விருந்து இருக்கும். அந்த சமயங்களில் குருதேவர் ஆசிரமவாசிகள் அத்தனை பேரையும் அதில் பங்கு கொள்ள அழைப்பார். விருந்தின் பொழுது அவர் தமது வேடிக்கைப் பேச்சினாலும், பொருள் பொதிந்த அறிவுரைகளாலும் கூடியிருந்தோரை குலுங்கக் குலுங்கச் சிரிக்க வைப்பார். விருந்து இல்லாத நாட்களில் அவரது மதிய உணவு இரண்டு வெறும் சப்பாத்தி, கொஞ்சம் காய்கறி, பழங்கள் மற்றும் தயிருடன் கூடியதாக அமையும்.

மதிய உணவிற்குப் பிறகு மாலை நான்கு மணிவரை குருதேவர் ஓய்வு எடுப்பார். பிறகு அவர் தமது எழுதும் அறைக்கு வருவார். அல்லது வராந்தாவிற்கு வந்து அதற்கென நியமிக்கப்பட்டிருக்கும் ஆசிரமவாசியால் கொண்டு வரப்பட்டுள்ள அன்றைய தபாலைப் பார்ப்பார். கடிதங்களைப் பார்க்கும் பொழுதே தமது தொண்டர்களுக்கு அந்தக் கடிதங்களுக்கு என்னென்ன பதில் எழுதவேண்டும் என்று தேவையான குறிப்புக்களைச் சொல்லுவார். இந்தவேலை முடிந்ததும், யாராவது பக்தர் அல்லது பார்வையாளர் அவரது தரிசனத்தைப் பெற்று அவருடன் உரையாடுவார்.

மாலை வேளைகளில் கங்கையை நோக்கி அமர்ந்துகொண்டு மாலை ஆறுமணி வரை தியானத்தில் அமர்ந்திருப்பார். அதன் பிறகு அவர் தமது மாலை பூஜையை முடித்துக் கொண்டு இரவுச் சாப்பாட்டையும் முடித்துக் கொள்வார். இரவு உணவிற்குப் பிறகு உடனே ஸத்ஸங்கத்திற்குத் தயாராகிவிடுவார். தமது குடீரிலிருந்து கிளம்புவதற்கு முன் அவரது இஷ்டதெய்வமான முரளி மனோஹர் கிருஷ்ணர் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ள பூஜை அறையில் சிறிது நேரம் பிரார்த்தனை செய்து ஆரத்தியை முடித்து விட்டு தமது நெற்றியில் விபூதி குங்குமம் இட்டுக் கொள்வார். இது காலை மாலை இரண்டு வேளைகளிலும் அவர் கடைப்பிடித்த வழக்கமாகும். ஸத்ஸங்கத்திற்கு இன்னும் கொஞ்ச நேரம் இருக்குமானால் வராந்தாவில் அமர்ந்து பக்தர்களுடன் உரையாடுவார். அல்லது ஆசிரம தொண்டர்களுக்கும் செயலாளர்களுக்கும் அறிவுரைகள் வழங்குவார். ஏழுமணிக்கு வைரவிழா அறைக்கு முன் உள்ள இடத்தில் அவர் ஸத்ஸங்கத்திற்கு ஆஜராய் விடுவார். அவர் தாமே மும்முறை 'ஓம்' என்று சொல்லி ஜய கணேச கீர்த்தனையுடன் ஸத்ஸங்கத்தை தொடங்குவார். இதைத் தொடர்ந்து ஸ்ரீசூக்தம் போன்றவற்றின் பாராயணம், அதன் பின் தினசரி உபன்யாசம் (ஹிந்தி அல்லது ஆங்கிலம்) நிகழும். குரு பூர்ணிமா போன்ற விசேஷ நாட்களில் குருதேவர் 10 அல்லது 15

நிமிடங்களுக்குச் சொற்பொழிவாற்றுவார். அதன்பின் மஹா மந்திர கீர்த்தனை, மஹா ம்ருத்யுஞ்ஜய மந்திர பாராயணம் மற்றும் ஆரத்தி பிரசாதம் வழங்குவதுடன் ஸத்ஸங்கத்தை நிறைவு செய்வார். புனித பிரசாதத்தை ஏற்றுக் கொண்ட பின் அவர் இரவு 9.00 அல்லது 9.30 க்கு தமது குடீருக்குத் திரும்புவார். பிறகு ஒரு கப் பால் அருந்திவிட்டு பத்துமணிக்கு உறங்கச் செல்லுவார்.

பலவகைப் பெருமைகளை உடைய இந்த மகாபுருஷர் 'கொடுப்பதில்' தனிச் சிறப்பு வாய்ந்தவர். எப்பொழுதும் அவருடன் செல்லும் உதவியாளர்கள் மூன்று நான்கு பைகளைச் சுமந்து செல்வார்கள். இலவச விநியோகத்திற்காக உள்ள பிரசுரங்கள், துளசிமாலைகள், பணம் போன்றவை இருக்கும். அவரைப் பார்க்க யார் வந்தாலும் சரி, அது ஆசிரமவாசியோ, சிஷ்யரோ அல்லது பார்வையாளரோ யாராக இருந்தாலும், எவரும் வெறும் கையுடன் திரும்ப முடியாது. தம்மைப் பார்க்க வந்தவர் யாரும் வெறும் கையுடன் திரும்பிச் செல்வதை குருதேவர் விரும்பமாட்டார். 1954 – 1957ம் வருடங்களில், அதாவது ஆரம்ப நாட்களில், குருதேவரே முந்திரிப்பருப்புடன் கூடிய ஒரு பையை எப்பொழுதும் தம்முடன் சுமந்து செல்வார். வழியில் காண்போருக்கெல்லாம் அதைக் கொடுத்துக் கொண்டேபோவார். வழியில் எவராவது ஸாது அல்லது நோயாளி கண்ணில் தென்பட்டால் உடனே தாமதிக்காமல் அவர்களுக்கு உதவி செய்ய முற்படுவார். பொதுவாக அது பணஉதவியாகவே இருக்கும். கொடுங்கள், கொடுங்கள், கொடுங்கள்... இது தான் அவரது கொள்கை. அதனால் அவர் 'கிவானந்தா'(Givananda) என்று அழைக்கப்பட்டதில் எந்தவித ஆச்சரியமும் இல்லை. கொடுப்பதில் அவர் மகிழ்ச்சி அடைந்தார். பகிர்ந்து கொள்வதில் அவர் இன்பம் கண்டார். கொடுப்பதிலும் கூட அவர் தமது வேடிக்கையை விட்டதில்லை. தமது தானத்தைப் பற்றி குறிப்பிடுகையில் அவர் தமது உதவியாளர்களிடம் சில சங்கேத வார்த்தைகளைக் குறிப்பிடுவார். 'ஏக மத்வைதம் கொடுங்கள்' என்று அவர் சொன்னால் 'ஒரு ரூபாய்'

என்று அர்த்தம். 'த்வைதம்' என்றால் இரண்டு ரூபாய், பஞ்ச – பாண்டவ என்றால் ஐந்து ரூபாய், ஒரு ராவணன் என்றால் பத்து ரூபாய், பத்து ராவணன் என்றால் நூறு ரூபாய்.

காலை முதல் மாலை வரை அவர் மிகவும் சுறுசுறுப்பாக இருந்தாலும் அவர் சோர்வாகவோ, கோபத்துடனோ, சிடுசிடுப்பாகவோ காணப்படமாட்டார். அவரது அடக்கமான, அமைதியான, அன்பான தோற்றம் அவர் அருகில் செல்லும் எவருக்கும் புத்துணர்ச்சியையும் ஊக்கத்தையும் ஊட்டும். தங்களது பல்வேறு சிக்கலான பிரச்சினைகளுடன் அவரை அணுகும் எவரும் அவரை தரிசித்த பின் தக்க உதவியைப் பெற்ற மனத்திருப்தியுடன் திரும்பிச் செல்லுவர். அவர் தாம் மட்டும் எப்பொழுதும் மகிழ்ச்சியாக இருந்ததோடல்லாமல், தமது அடக்கமுடியாத சந்தோஷத்துடனும், பிறரைக் கவரும் புன்முறுவலுடனும் ஏனையோரையும் மகிழ்ச்சியில் ஆழ்த்தினார்.

*ஜய குருதேவ்!*
*லோகா : ஸமஸ்தா : ஸுகினோ பவந்து.*

## ஒரு ஸ்தாபனம் விரிவடைய...

செயலின் அடிப்படை ஆன்மீகமாயிருக்க வேண்டும். அனைத்துச் செயல்களும் ஆன்ம வளர்ச்சிக்கு உறு துணையாயமைய வேண்டும். வெறும் சமூக சேவை மட்டும் போதாது. சமூகஸ்தாபனங்கள் ஏராளம் உள்ளன. ஆன்மீகம் இன்றி இவற்றால் உருப்படியான காரியம் எதையும் செய்யமுடியாது. அவை வெறும் இயந்திரமயமான தொழிற்சாலைகளுக்கு நிகரே. எங்கும் இறைவன் நாமம் ஒலிக்க வேண்டும். பூஜை, வழிபாடு, கீதை, ராமாயணச் சொற்பொழிவுகள் நிகழவேண்டும். இப்படியிருந்தால் எந்த ஒரு ஸ்தாபனமும் நாளடைவில் விரிவடைந்து பிரம்மாண்டமானதொரு கேந்திரமாக மாறிவிடும்.

*– சுவாமி சிவானந்தா*

# குருதேவரின் சாதனை

1956 – 57 ஆரம்பத்தில் குருதேவர் ஸ்ரீசுவாமி சிவானந்தஜி மகராஜ் சரியாக காலை 7 மணிக்கு ஸத்ஸங்க்த்திற்குச் சென்று ஓம் மற்றும் ஜய கணேச கீர்த்தனையுடன் ஸத்ஸங்கத்தை ஆரம்பித்துவிடுவார். அவரது உள் அறையிலிருந்து ஸத்ஸங்கத்திற்குக் கிளம்புவதற்கு முன் அவர் தமது பூஜை அறைக்குச் சென்று பகவான் ஸ்ரீகிருஷ்ணருக்குத் தாமே ஆரத்தி செய்வார். பிறகு தமது நெற்றியில் விபூதி, குங்குமத்தை இட்டுக்கொண்டு அவர் வெளியில் வந்து வராந்தாவில் அமர்ந்து கொண்டு தமது அந்தரங்க உதவியாளர்களுடனோ அல்லது ஆசிரம அதிகாரிகளுடனோ உடனடியான கவனம் தேவைப்படும் விஷயங்களைப் பற்றி உரையாடுவார். அல்லது சீடர்கள், பார்வையாளர்களுடன் ஸம்பாஷணை செய்வார். ஸத்ஸங்கத்திற்குப் போவதற்கு முன் இதுவே அவரது அன்றாட வழக்கமாகும். சில சமயங்களில் ஸத்ஸங்கத்திலிருந்து அவர் திரும்பிவந்ததும் அவர் அதே வராந்தாவில் தமது செயலாளர் மற்றும் உதவியாளர்களுக்கு குறிப்புகள் வழங்குவது வழக்கம்.

1960ம் வருடத்தில் ஸ்ரீசுவாமி கிருஷ்ணானந்தஜி மகாராஜ் குருதேவர் குடீரத்தில் வசிக்கத் தொடங்கினார். அதிலிருந்து குருதேவர் வராந்தாவிற்கு வரும்பொழுதெல்லாம் ஸ்ரீசுவாமி கிருஷ்ணானந்தரை அழைத்து ஏதாவது முக்கியமான விஷயம் குறித்து உரையாடத் தொடங்கிவிடுவார். சில சமயங்களில் ஸ்ரீசுவாமி கிருஷ்ணானந்தஜி மகாராஜ் அவர்களே குருதேவரிடம் வந்து நமஸ்காரம் செய்துவிட்டு ஆசிரம விஷயங்களைப் பற்றி பேசுவார். இது 1963 வரை தொடர்ந்து நிகழ்ந்தது. 1963ல் குரு தேவர் ஸமாதி அடைவதற்கு சரியாக ஒரு மாதத்திற்கு முன்னர் குருதேவர் ஒரு நாள்

வழக்கம் போல் வராந்தாவிற்கு வந்து நாற்காலியில் அமர்ந்தார். அந்த சமயத்தில் ஸ்ரீசுவாமி கிருஷ்ணானந்தஜி மகாராஜ், டாக்டர் ஹ்ரதயானந்த மாதாஜி, 'ஸ்ரீசுவாமி சாந்தானந்தஜி மகராஜ், மற்றும் நான் மட்டுமே அங்கே இருந்தோம். குருதேவர், 'ஸ்ரீசுவாமி கிருஷ்ணானந்தஜி, தினமும் காலையில் நான் எனது சாதனையை கீழ்வருமாறு செய்கிறேன்.' என்று சொன்னார். குருமகாராஜ் அதிகாலையில் 3.30 முதல் 4.30 மணிக்குள் எழுந்திருப்பது வழக்கம். காலைக் கடன்களை முடித்த பின் அவர் தமது உள் அறைக்குச் சென்றுவிடுவார். அவர்கூப்பிட்டாலொழிய யாரும் அவரது அறைக்குள் செல்லக் கூடாது. அதனால் எங்களுக்கு குருதேவரது சாதனை என்ன என்பதுதெரியாது. இப்பொழுது குருதேவரே தமது சாதனை என்ன என்பது பற்றி எங்களிடம் சொன்னார். உண்மையில் அது எங்களுக்கு புதியதொரு செய்தியாக அமைந்தது. குருதேவர் சொன்னார் :– தினமும் நான் அதிகாலை 3.30யிலிருந்து 4.00 மணிக்குள் எழுந்திருப்பேன். எழுந்திருந்ததும் நான் பகவானை வணங்குவேன். பிறகு அழைப்பு மணியை அழுத்துவேன். இரண்டு உதவியாளர்கள் என் அறைக்கு வந்து நான் ஸ்நான அறைக்குச் செல்வதற்கு எனக்கு உதவி செய்வார்கள். அவர்களைப் பார்க்கையில் உதவி செய்வதற்காக வந்துள்ள விராட் புருஷனின் இரு அம்சங்களாக எனக்குத் தோன்றும். முதலில் நான் மானஸீகமாக அவர்களை வணங்குவேன். பிறகு அவர்களது உதவியுடன் குளியலறைக்குச் செல்வேன். ஸ்நானம் செய்த பிறகு நான் திரும்ப வந்து எனது அறையில் அமருவேன். பிறகு எனது சாதனையை இவ்வாறாக தொடங்குவேன். முதலில் எங்கும் நிறைந்த, எல்லாம் வல்ல பரமாத்மனை நான் நினைத்து சிறிது நேரம் தியானம் செய்வேன். பிறகு மானஸீகமாக திரிமூர்த்திகள் மற்றும் எல்லா தெய்வங்களின் பெயர் மற்றும் உருவங்களை நினைத்து வணங்குவேன். பிறகு எல்லா புனித ஸ்தலங்களையும் மானஸீகமாக நினைப்பதுடன் எல்லா புனித ஆறுகள் மற்றும் சமுத்திரங்களையும் நினைத்துக்கொண்டே ஸ்நானம்

செய்வேன். ஆங்காங்கு உள்ள தெய்வ விக்கிரகங்களையும் சகல தேவதைகளையும் மானசீகமாக வணங்குவேன். அதன்பின் எல்லா தேவதைகளைக் குறித்தும் தனித்தனியாக ஒரு மாலை ஜெபம் பண்ணுவேன். பிறகு நான்கு மகாவாக்கியங்களையும் வேத மந்திரங்களையும் பாராயணம் செய்வேன். அதனுடன் பத்து உபநிஷதங்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட சில மந்திரங்களை ஜபிப்பேன். மகாபாரதம், ராமாயணம், பாகவதத்திலிருந்து சில சுலோகங்கள் எனக்கு மனப்பாடமாகத் தெரியும் . அவற்றை நான் பாராயணம் செய்வேன். ரிஷி முனிவர்களை நினைவு கூர்ந்து அவர்களை மானசீகமாக நமஸ்கரிப்பேன். அதன்பின் சங்கராச்சாரியார், ராமானுஜாச்சாரியார், மத்வாச்சாரியார் போன்ற ஆச்சாரியர்களை மனதால் நினைந்து மானசீகமாக நமஸ்கரிப்பேன். பிறகு அவர்களால் அருளப்பட்டுள்ள சில ஸ்தோத்திரங்களையும் பாடல்களையும் ஜபிப்பேன். இதன்பின் நான் பிரணவ ஜபம் செய்து தியானம் செய்வேன். தியானத்திற்குப் பிறகு நான் படுக்கையிலேயே சில பயிற்சிகளைச் செய்து பிராணாயாமம் செய்வேன். இந்த சாதனை முறை முழுவதையும் செய்து முடிக்க எனக்கு சுமார் 2 முதல் 2 1/2 மணி நேரம் பிடிக்கும். அதன் பிறகு எனது சிற்றுண்டியைக் கொண்டு வரவேண்டி என் உதவியாளர்களை அழைக்க மணி அடிப்பேன். சிற்றுண்டி முடிந்ததும், நான் அலுவலக வேலையைக் கவனிக்கச் சென்றுவிடுவேன். தங்களது சொந்த விஷயங்களைப் பற்றிப் பேசுவதற்காக தனிப்பட்ட முறையில் எனது தரிசனத்தைப் பெற விரும்பும் சீடர்களுக்காக ஒரு சிறிது நேரம் வராந்தாவில் அமருவேன். அவர்கள் பிரதான வாசலில் நுழைவதற்கு முன்பே நான் மும்முறை மஹா ம்ருத்யுஞ்ஜய மந்திரத்தை ஜபித்து அவர்களது ஆரோக்கியத்திற்காகவும் ஆனந்தத்திற்காகவும் பிரார்த்தனை செய்வேன். இந்த சிஷ்யர்கள் பொதுவாக தங்களது பிரச்சினைகளைப் பற்றியும் ஆன்மீக விஷயங்களைப் பற்றியும் என்னுடன் பேச விரும்புவார்கள். அவற்றை நான் பொறுமையாகக் கேட்பேன்.

அவர்களது பிரச்சினைகளையும் இன்னல்களையும் தீர்க்க பலத்தை அருளும்படி பகவானிடம் பிரார்த்தனை செய்வேன். பிறகு பார்வையாளர்கள் என்னுடன் அமைதியாக அமர்ந்திருப்பார்கள். பிறகு த்ரயம்பக மந்திரத்தை ஜெபித்துக் கொண்டே நான் பிரசாதத்தை விநியோகம் செய்வேன். கடந்த பல வருடங்களாக இதுதான் எனது சாதனையாக இருந்து வருகிறது'. தமது சாதனையைப் பற்றி குருதேவரே கூறக் கேட்ட நாங்கள் நால்வரும் ஒரு இனம் புரியாத மகிழ்ச்சிக்குள்ளானோம். ஆழ்ந்த பக்தியுடன் குருதேவரை நாங்கள் ஸாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தோம். சில சமயங்களில் பக்தர்களுடன் அவர் செய்த சம்பாஷணையின் முடிவில் குருதேவர் அவர்களைப் பார்த்து, 'ஸப் அச்சா ஹோ ஜாயேகா. பகவான் கோயாத் ரகோ'எல்லாம் சரியாகி விடும். கடவுளை எப்பொழுதும் நினைவில் வையுங்கள் என்று சொல்லுவார். நமது சாதனையை நாம் மறக்கக்கூடாது. கடவுள் எப்பொழுதும் நம்முடன் இருக்கிறார் என்பதை நமக்கு அவர் நினைவு படுத்துவார்.

அவரது சாதனை முறையை நாமும் பின்பற்றி தெய்வீக நிலையை அடைவோமாக! நமது அன்றாட ஆன்மீக சாதனையில் முன்னேற குருதேவர் நம்மை ஆசீர்வதிப்பாராக!!

*ஸத்குரு பகவான் கீ ஜய்*

**குருதேவர் பெரிதும் போற்றிய**
**மஹா ம்ருத்யுஞ்ஜய மந்திரம்**

ஓம் த்ரயம்பகம் யஜாமஹே ஸுகந்திம் புஷ்டிவர்தனம்
உர்வாருகமிவ பந்தனாந் ம்ருத்யோர் முக்ஷீய மாம்ருதாத்
(சகல ஆபத்துக்களிலிருந்தும் காக்க வல்லது)

# குருதேவரின் மஹாஸமாதிக்கு முந்தைய நாட்கள்

ஓம் நமோ பகவதே சிவானந்தாய!

மகாபுருஷர்கள், சாதுக்கள், ஞானிகள் சில சமயங்களில் இந்தப் பூவுலகிலிருந்து அவர்கள் விடைபெற்றுச் செல்லும் வேளையை தங்கள் சீடர்களிடம் முன்னரேயே தெரிவித்துவிடுகின்றனர். ஆனால் அவர்களில் சிலர் யாருக்கும் சிறிதளவுகூட அதனால் துன்பம் ஏற்படக்கூடாது என்பதற்காக மறைமுகமாக அதை உணர்த்துகின்றனர். அத்தகையவர்களுள் ஸத்குருதேவரும் ஒருவர். அவரது இதயம் மிக மிக இளகியது. எனவே தமது அந்திம வேளையைப் பற்றி அவர் ஏற்கனவே நன்கு அறிந்திருந்தாலும் அவர் தமது சீடர்களிடம் அது குறித்து நேரடியாகத் தெரிவிக்காமல் மறைமுகமாக சில குறிப்புகளை உணர்த்தினார்.

1963ம் வருடம் மகாசிவராத்திரிக்கு முன்பு குருதேவர் இரவு ஸத்ஸங்கத்தில் இருக்கையில் ஆசிரமவாசி ஒருவர் ஸத்ஸங்கத்தின் இறுதியில் ஸன்யாஸதீட்சை வேண்டினார். அந்த ஆண்டில் ஸன்யாஸ தீட்சை கொடுக்கப்படமாட்டாது என்று குருதேவர் தெரிவித்தார். அதைக் கேட்டு அந்த ஆசிரமவாசி தனது குடீருக்குத் திரும்பிவிட்டார். சில நிமிடங்கள் கழித்து அருகிலிருந்த எங்களைப் பார்த்து குருதேவர், 'அடுத்த ஆண்டில் என்ன நடக்குமோ யாருக்குத் தெரியும்? அவரைக் கூப்பிடுங்கள். அவருக்கு நான் ஸன்யாஸ தீட்சை அளிக்கிறேன்', என்று கூறினார். அந்த விஷயம் அந்த ஆசிரமவாசிக்குத் தெரிவிக்கப்பட்டது. அந்த வருடம் அவரையும் சேர்த்து மூன்று அதிருஷ்டசாலிகள் ஸன்யாஸ தீட்சை பெற்றனர்.

குருதேவர் ஏகாதசி குறித்து மிகவும் சிரத்தை காட்டினார். ஏகாதசி எப்பொழுது என்று அவர் எங்களைக் கேட்பார். நாங்களும்

அந்த தேதியைக் குறித்துக் கொடுப்போம். ஒரு நாள் ஏப்ரல் மாத்தில் குருதேவர் நாட்காட்டி கொண்டு வருமாறு எங்களிடம் கேட்டார். நாங்கள் ஏகாதசியைக் குறித்துச் சொன்னோம். ஆனால் குருதேவர் காலண்டரைத் தான் பார்க்க வேண்டும் என்று வற்புறுத்தினார். நாங்கள் அவரிடம் காலண்டரைக் கொடுத்தோம். அவர் ஜூலை மாதம் வரை இரண்டு மூன்று பக்கங்களை திருப்பிப் பார்த்துவிட்டு எங்களிடம் காலண்டரைத் திரும்பக் கொடுத்தார். அவர் என்ன பார்த்தார், எதைத் தீர்மானித்தார் என்பதை எங்களால் அப்பொழுது தீர்மானிக்கமுடியவில்லை. ஒரு நாள் மார்ச் மாதத்தில் அலுவலகப் பணிக்குச் செல்லும் முன்பு குருதேவர் சுவாமி சாந்தானந்தாவை அழைத்து சந்தன பாதுகைகள் வேண்டி மைசூர் பக்தர்களுக்கு எழுதும்படிக் கேட்டுக் கொண்டார். நாங்கள் உடனே திருமதி கோபால்ராஜ் அர்ஸ் அவர்களுக்கு எழுதினோம். உடனே அவரும் வெள்ளி தகட்டால் மூடப்பட்ட சந்தன பாதுகைகளை அனுப்பி வைத்தார். அதைப் பெற்றுக்கொண்ட குருதேவர் மிகவும் சந்தோஷம் அடைந்தார். ஒரு நாள் பாத பூஜை ஆரம்பிக்க இருந்த வேளையில் குருதேவர் அந்தப் பாதுகைகளை தமது பாதங்களுக்கு அடியில் வைக்குமாறு கேட்டுக் கொண்டார். எனவே அன்று அந்த பாதுகைகளின் மீது குருதேவரின் புனித பாதங்களை வைத்து பாத பூஜை செய்தோம். பிறகு குருதேவர் எங்களிடம் பாதபூஜை செய்யும் போது அந்தப் பாதுகைகளையும் வைத்துக் கொள்ள வேண்டும் என்று தெரிவித்தார். ஆனால் அடுத்த பாதபூஜை சமயத்தில் நாங்கள் அந்தப் பாதுகை பற்றி முற்றிலும் மறந்து விட்டோம். ஆனால் குருதேவர் எங்களை நினைவூட்டி அவற்றைக் கொண்டு வரச் செய்தார். எனவே குருதேவர் தமது ஸமாதிக்கு மூன்று நான்கு மாதங்களுக்கு முன்னதாகவே அந்தப் பாதுகைகளுடனேயே பாதபூஜையை மேற்கொண்டார். இவ்விதம் தமது மகாஸமாதி பற்றி குருதேவர் குறிப்பால் உணர்த்தினார். ஆனால் நாங்கள் தான் அதைப் புரிந்து கொள்ளவில்லை.

பொதுவாக கோடைகாலத்தில் ஸத்ஸங்கம் வைரவிழா அறைக்கு முன்னர்தான் நடக்கும். ஜூன் மாதம் 19ம் தேதியன்று குருதேவர் வழக்கம்போல் ஸத்ஸங்கத்திற்குச் சென்றார். ஒரு மணி நேரத்திற்குப் பிறகு ஸத்ஸங்கம் நடந்து கொண்டிருந்தபோது பலத்த மழை பெய்தது. அங்கே அமர்ந்திருந்த சிஷ்யர்களும் பக்தர்களும் அவசரம் அவசரமாக வைரவிழா அறைக்குச் சென்றனர். சிறிது நேரத்திற்குப் பிறகு மழை சிறிது குறைந்தது. நாங்கள் வைரவிழா அறையிலிருந்து வெளியே வந்து ஆஸ்பத்திரி வாசல் வரை வந்திருப்போம். மீண்டும் பலத்த மழை பிடித்துக் கொண்டது. எங்களால் திரும்பவும் வைரவிழா அறைக்குச் செல்ல முடியவில்லை. எனவே மழையில் சொட்டச் சொட்ட நனைந்து குருதேவர் குடீருக்குத் திரும்பினோம். அங்கே எங்கள் உடையை மாற்றிக் கொண்டோம். அதைப் போலவே மறுநாளும் நிகழ்ந்தது. மூன்றாவது நாள் குருதேவருக்கு லேசாக மூட்டுவலி ஏற்பட்டது. டாக்டர் ஹ்ரதயானந்த மாதாஜி வலிக்காக அவருக்கு சில மருந்துகள் கொடுத்தார். வலிகுறையவில்லை. மாறாக வலி நாளுக்கு நாள் அதிகரித்தது. டாக்டர்கள் குருதேவரிடம் நகரக் கூடாது என்றும் ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டும் என்றும் அறிவுறுத்தினர். அதனால் குருதேவர் ஸத்ஸங்கத்திற்குச் செல்லாமல் தமது குடீரிலேயே ஸத்ஸங்கத்தை நிகழ்த்தினார். ஜூன் மாதம் 23ம் தேதியன்று காலையில் குருதேவர் வராந்தாவிற்கு வந்து அப்பொழுது ஆசிரமத்திற்கு வந்திருந்த எனது பூர்வாசிரம பெற்றோருக்கு தரிசனம் அளித்தார். அன்றுதான் ஒரு வருடம் ஏகாந்த வாசத்திற்காகச் சென்றிருந்த ஸ்ரீசுவாமி சிதானந்தாஜி மகராஜ் ஆசிரமத்திற்குத் திரும்பியிருந்தார். பிறகு குருதேவரும் ஸ்ரீசுவாமி சிதானந்தரும் சுமார் ஒரு மணி நேரத்திற்கும் மேலாக ஆழ்ந்து உரையாடிக் கொண்டிருந்தனர். அவரது உடல்நலம் மற்றும் ஏகாந்தவாசம் குறித்து குருதேவர் விசாரித்தார். பிறகு சிதானந்தஜி மகராஜ் குருதேவரிடம் தமது கேதார்நாத் யாத்திரையைப் பற்றிக் குறிப்பிட்டு இரண்டு நாட்களில் செல்ல இருப்பதாகவும் கூறினார்.

அவரிடம் அதிகமாக பயணம் செய்து உடலை வருத்திக் கொள்ள வேண்டாம் என்றும் ஓய்வு எடுத்துக் கொள்ளும்படியும் குருதேவர் கூறினார். அவ்விதம் கூறிவிட்டு அவரது கேதார் யாத்திரைக்காக குருதேவர் சிறிது பணம் கொடுத்தார். பிறகு சுவாமி சிதானந்தஜி மகாராஜ் குருதேவரின் குடீரை விட்டுச் சென்று விட்டார். மறுநாள் சுவாமி சிதானந்த மகராஜ் தமது கேதார்யாத்திரைக்காக புறப்பட்டுக் கொண்டிருந்த சமயத்தில் சோ வென்று பலத்த மழை கொட்டியது. அதனால் அன்று அவர் யாத்திரை கிளம்ப முடியவில்லை. அடுத்த நாளான ஜூன் 25ம் தேதியன்று கிளம்ப அவர் விரும்பினார். ஆனால் குருதேவரின் உடல்நிலையைப் பார்த்த டாக்டர் குட்டி மாதாஜி அந்த சமயத்தில் அவர் யாத்திரைபோவது நல்லதல்ல என்றும், குருதேவரது உடல் நலம் நன்றான பிறகு சில நாட்கள் கழித்துப் போகலாம் என்றும் கூறினார். அதைக் கேட்ட சுவாமி சிதானந்தர் தமது கேதார் யாத்திரையை ரத்து செய்துவிட்டார். குருதேவரது உடல்நலக் குறைவு சமயத்தில் அவருக்குப் பதிலாக சுவாமி சிதானந்த மகராஜ் இரவு ஸத்ஸங்கத்தை நடத்துதல் மற்றும் ஆசிரமத்தின் ஆன்மீக காரியங்களை கவனிக்க ஆரம்பித்தார்.

சுவாமி சிதானந்தஜி மகராஜ் குருதேவரது குடீரை விட்டுச் சென்றவுடன் அச்சகத்திலிருந்து சில புதிய புத்தகங்களுடன் சுவாமி தயானந்தாஜி அங்கே வந்தார். அந்தப் புத்தகங்களைப் பார்த்து குருதேவர் மிகவும் சந்தோஷமடைந்தார். அந்தப் புத்தகங்களின் பக்கங்களைத் திருப்பிப் பார்க்கலானார். குருதேவர் ஒரு புத்தகத்தின் பக்கங்களைத் திருப்பிக் கொண்டிருந்த பொழுது அவரது இடது கை நடுங்குவதை நாங்கள் கவனித்தோம். அந்த சமயத்தில் லக்ஷ்மணபுரியிலிருந்து ஒரு பக்தர் தமது குடும்பத்தினருடன் அங்கே வந்திருந்தார். தனது ஒரே குழந்தைக்கு குருதேவர் தமது திருக்கரங்களாலேயே அன்னப்ராசனம் செய்து வைக்க அவர் விரும்பினார். உடனே குருதேவர் பால் மற்றும் சாமான்களைக்

கொண்டு வருமாறு சொல்லி அன்னப்ராசனம் பண்ணி வைத்தார். பிறகு குருதேவர் தமது குடீருக்குள் சென்று விட்டார். அன்று இரவு குருதேவர் ஸத்ஸங்கத்திற்கு வெளியில் வரவில்லை. தமது குடீரிலேயே இருந்தார்.

பொதுவாக குருதேவர் இரவில் பன்னிரண்டிலிருந்து இரண்டு மணிக்குள்ளாக எழுந்து தொண்டர்களை அழைக்க வேண்டி மணி அடிப்பது வழக்கம். அன்று இரவும் அவர் மணியை அடித்தார். நாங்கள் உள்ளே சென்று அவரை கழிப்பறைக்குக் கூட்டிச் செல்ல முயன்றோம். குருதேவர் கழிப்பறைக்குச் செல்லும் சமயத்தில், அவரது இடதுகால் எப்பொழுதும் போல இயங்கவில்லை என்பதையும், குருதேவர் இழுத்து இழுத்து நடப்பதையும் நாங்கள் கவனித்தோம். நடப்பதில் குருதேவர் மிகவும் சிரமப்பட்டார். நாங்கள் அவரைத் தூக்கிக் கொண்டு வந்து படுக்கையில் வைத்தோம். காலையில் டாக்டர் மாதாஜி வந்து குருதேவரைப் பார்த்தார். டாக்டர் குட்டி மாதாஜியும் அப்பொழுது ஆசிரமத்தில் இருந்ததால் அவரும் வந்து குருதேவரைப் பார்த்தார். அவர் குருதேவரை சோதித்துப் பார்த்துவிட்டு சில மருந்துகளை எழுதிக் கொடுத்தார். 24ம் தேதி இரவு குருதேவரது நிலைமை கொஞ்சம் சிக்கலாயிற்று. எனவே டெல்லியிலிருந்து ஒரு நிபுணரை அழைப்பது என்று முடிவு செய்யப்பட்டது. ஒரு ஆசிரமவாசியை உடனே ஸ்ரீமதி வாணிபாய்ராமைச் சந்திக்க டெல்லிக்கு அனுப்பினார்கள். அவர்உடனே அப்பொழுது ராஷ்டிரபதியாக இருந்த டாக்டர் எஸ். ராதா கிருஷ்ணனை அணுகி ஒரு டாக்டரை அனுப்புமாறு கேட்டுக் கொண்டார். டாக்டர் ராதாகிருஷ்ணனும் தமது சொந்த டாக்டரை உடனே ஆசிரமத்திற்கு அனுப்பிவைத்தார். அவர் வந்து குருதேவரைப் பரிசோதித்துவிட்டு மருந்து எழுதிக் கொடுத்து திரும்பச் சென்று விட்டார். 25ம் தேதியன்று இரவு சுவாமிஜி உணர்விழந்தார். பிரக்ஞையற்ற நிலையை அடைந்தார். நான்கு நாட்களுக்குப் பிறகு மெதுவாகவும்

படிப்படியாகவும் குருதேவர் சுயநினைவைப் பெற்றார். அவரை எந்தவிதத்திலும் தொந்தரவு செய்யக் கூடாது என்றும் ஆனால் அவரை கவனமாக கண்காணித்து வருமாறும் டாக்டர்கள் எங்களைக் கேட்டுக் கொண்டனர். குருதேவருக்குப் பூரண ஓய்வு தேவையாயிருந்தது. டாக்டர் மாதாஜி, சுவாமி சாந்தானந்தாஜி, சுவாமி கல்யாணானந்தஜி, பீம்ஸேன்ஜி, நான் ஆகிய அனைவரும் சுவாமிஜியை எந்தவிதத்திலும் தொந்தரவு செய்யாமல் பார்த்துக் கொண்டோம். இவ்வாறாக சில நாட்கள் கழிந்தன. ஜூலை 6ம் தேதி அந்தவருடம் குரு பூர்ணிமா தினமாக அமைந்தது. நாங்கள் பாதுகா பூஜை செய்தோம். ஆனால் குழுமியிருந்த பக்தர்கள் மிகவும் வருத்தம் அடைந்தனர். சிலர் அன்று குருதேவரின் தரிசனம் கிடைக்கவில்லையே என்று உரத்தகுரலில் விம்மி அழுதனர். நான்கு நாட்கள் குருதேவர் உணர்வற்ற நிலையில் இருந்தாலும், இன்னமும் அவர் மிகவும் நெருக்கடியான நிலைமையில்தான் இருந்தார். அப்படியிருந்தும் அன்றைய குருபூர்ணிமா தினத்தில் அதிகாலை நான்கு மணிக்கு குருதேவர் கீழ்க்கண்டவாறு உச்சரித்தார்.

*அதாதோ பிரம்மஜிக்ஞாஸா*
*சாஸ்த்ர யோனித்வாத்*
*தத்து ஸமன்வயாத்*

— பிரம்ம சூத்திரம்

*ஸதுதீர்க்க கால நைரந்தர்ய*
*ஸத்காரஸேவிதோத்ருட பூமி:-*

— பதஞ்ஜலியோக சூத்ரம்

7ம் தேதி காலையில் காலை சிற்றுண்டிக்குப் பிறகு குருதேவர் வராந்தாவிற்கு வந்து அங்கே உட்கார விரும்பினார். எனவே நாங்கள் அவரை அங்கே கொண்டுவந்து பெரிய சோபாவில் மெதுவாக அமரச் செய்தோம். கங்கையைப் பார்த்த வண்ணம் குருதேவர் வராந்தாவில் அமர்ந்தார். அவருக்கு கங்கையைப் பார்ப்பதில் மிகுந்த விருப்பம்.

அவர் 'கங்கை என் அன்னை' என்று எப்பொழுதும் சொல்லுவார். அவர் கங்கையைத் தரிசித்து சுமார் இரண்டு வாரங்களுக்கு மேல் ஆகப்போகிறது என்பதால், அன்று அன்னை கங்கையைப் பார்ப்பதில் அவருக்கு மிகுந்த மகிழ்ச்சி ஏற்பட்டது. அவர் வராந்தாவில் உட்கார்ந்திருந்த பொழுது அவரைத் தரிசிக்க சில பக்தர்கள் வந்தனர். அவர் அவர்களைப் பார்த்துப் பேசி பிரசாதமும் அளித்தார். பக்தர்கள் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தனர். அன்றுமுதல் குருதேவர் தினமும் காலையில் வராந்தாவிற்கு வந்து கங்கை அன்னையைப் பார்த்த வண்ணம் சுமார் அரை மணி நேரம் அமர்ந்திருப்பார். அவருக்கு மிகவும் நெருங்கிய பக்தர்கள் வந்தால் அவர்களுடன் அவர் வழக்கம்போல் விளையாட்டாக சிரிக்கச் சிரிக்கப் பேசுவார். சில சமயங்களில் ஆசிரமத்தில் உள்ள ஆசிரமவாசிகளுக்கு எல்லாம் கிடைக்கிறதா, ஏதாவது சிரமம் இருக்கிறதா என்று விசாரிப்பார். ஆசிரமத்தில் உள்ள அத்தனை பேருக்கும் அவர் தாய்க்கு நிகரானவர். ஜூலை 13ம் தேதி அவர் வழக்கம்போல் வராந்தாவிற்கு வந்தவர் அங்கே முன்பு போல அதிக நேரம் உட்கார முடியவில்லை. சுமார் 15 – 20 நிமிடங்களுக்குப் பிறகு உள்ளே போக விரும்புவதாக அவர் சொன்னார். மதிய உணவிற்குப் பிறகு அவர் சிறிது ஓய்வு எடுத்தார். இரவில் சிறிது மலம் கழித்தார். நடு இரவு வரை சரியாக அவரால் தூங்க முடியவில்லை. ஓய்வு நேரம் கிடைத்த போதெல்லாம் குருதேவர் தமது தொடையில் 'ஓம்' என்று எழுதுவது வழக்கம். 13ம் தேதி இரவு 2 முதல் 3 மணிக்குள் குருதேவர் தமது தொடையில் 'ஓம்' என்று எழுதிக் கொண்டிருந்ததை நாங்கள் பார்த்தோம். 3 மணிக்குப் பிறகு சிறிது தூங்கினார். ஜூலை 14ம் தேதி காலை 6 மணிக்கு குருதேவர் எழுந்திருந்தார். முகம் கழுவினார். வழக்கம்போல் அவரது சிற்றுண்டியை நாங்கள் தயாரித்தோம். அவரும் அதைச் சாப்பிடத் தயாரானார். ஆனால் திடீரென்று அவரது புலன்கள் செயல்பட மறுத்தன. தமது கையால் குருதேவரால் சிற்றுண்டியை ஏற்க முடியவில்லை. எனவே நாங்கள் சிறிது உணவை அவர் வாயில்

வைக்க முயன்றோம். ஆனால் அதையும் குருதேவரால் விழுங்க முடியவில்லை. உடனே நாங்கள் குட்டி மாதாஜியை அழைத்தோம். அவரது அறிவுரையின் பேரில் கொஞ்சம் பழச்சாறு கொடுத்தோம். அதை அவர் மிகுந்த சிரமத்துடன் அருந்தினார். குருதேவரைப் பார்த்தபின் டாக்டர் குட்டி மாதாஜி டேராடூன் மிலிடரி ஆஸ்பத்திரியில் அவருக்குத் தெரிந்த ஒரு டாக்டருக்குப் போன் செய்தார். காலை 11 மணிக்கு அந்த டாக்டர் வந்தார். குருதேவரை சோதனை செய்ய ஆரம்பித்தார். குருதேவர் அன்று காலையிலிருந்து யாருடனும் பேசவேயில்லை. ஆனால் டாக்டர் சோதனை செய்து அவரிடம் கேள்விகள் கேட்கத் தொடங்கியதும் குருதேவரே டாக்டருடன் பதில் சொல்ல ஆரம்பித்து வேடிக்கையாக அவருடன் பேசத் தலைப்பட்டார். அதைப் பார்த்த டாக்டர் பெரிதும் வியந்தார். அவரும் சிரித்தார். எத்தனை நாட்கள் குருதேவருக்கு உடல்நலம் சரியில்லை என்று டாக்டர் எங்களிடம் கேட்டார். அதற்கு குருதேவரே கடந்த 21 நாட்களாக தனக்கு உடல் நலம் சரியில்லை என்று பதிலளித்தார். பிறகு டாக்டருக்கு சிற்றுண்டியும் காபியும் கொடுக்குமாறு குருதேவர் எங்களைக் கேட்டுக் கொண்டார். டாக்டர் சென்ற பிறகு நாங்கள் குருதேவருக்கு மதிய உணவு கொடுப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்தோம். நாங்கள் அவருக்கு உணவு பரிமாறிக் கொண்டிருந்த பொழுது திடீரென்று குருதேவருக்கு நடுக்கம் ஏற்பட்டது. உடல் உஷ்ணமும் அதிகரித்தது. எனவே நாங்கள் குருதேவரைப் படுக்கையில் படுக்கவைத்து அவரைப் போர்வையால் போர்த்தினோம். உடனே டாக்டர் குட்டி மாதாஜிக்கு தகவல் தெரிவித்தோம். மாதாஜி வந்து சில ஊசிகள் போட்டார். மெதுவாக நடுக்கமும் காய்ச்சலும் குறைந்து குருதேவர் தூங்க ஆரம்பித்தார். இரண்டு மணி நேரத்திற்குப் பிறகு சுவாசிப்பதில் அவருக்கு சிரமம் ஏற்பட்டது. அதன் பின் குருதேவரை பின்புறம் சிறிது தாங்கல் கொடுத்து அமர வைத்தோம். கொஞ்சம் ஓய்வு எடுத்துக் கொண்ட பின் குருதேவர் தண்ணீர் வேண்டி சைகை காண்பித்தார். அவருக்கு 'வென்னீர்',

வேண்டுமா என்று நாங்கள் கேட்டபொழுது, குருதேவர் 'கங்கா ஜலம்' என்று பதிலளித்தார். அதுதான் அவர் உச்சரித்த கடைசி வார்த்தை. ஒரு டம்ளர் கங்கா ஜலத்தை நாங்கள் அவருக்குக் கொடுத்தோம். அதை முழுவதையும் குருதேவர் குடித்தார். மெதுவாக கண்களை மூடி தூங்கிவிட்டார். பிறகு மாலை 6 மணிக்கு மீண்டும் சுவாசத்தில் சிக்கல் ஏற்பட்டது. மிலிடரி ஆஸ்பத்திரியிலிருந்து மேலும் சில டாக்டர்கள் வந்து குருதேவரைப் பரிசோதித்து அவருக்கு ஆக்ஸிஜன் அளிக்குமாறு அறிவுறுத்தினர். இரவு ஒன்பது மணிக்கு ஆசிரமத்தில் உள்ள மூத்த சுவாமிகளான ஸ்ரீசுவாமி சிதானந்த மகராஜ் போன்ற அத்தனை பேருக்கும் குருதேவரின் உடல்நிலை பற்றி தெரிவிக்குமாறு டாக்டர் குட்டி மாதாஜி எங்களைக் கேட்டுக் கொண்டார். பத்து மணிக்கு ஸ்ரீசுவாமி சிதானந்தஜி மகராஜ், ஸ்ரீசுவாமி கிருஷ்ணானந்தஜி மகராஜ், ஸ்ரீசுவாமி மாதவானந்தஜிமகராஜ் மற்றும் மூத்த சுவாமிகள், ஆசிரமவாசிகள் குருதேவரின் குடீருக்கு வந்து குருதேவரின் தரிசனத்தைப் பெற்றனர். 11 மணிக்கு குருதேவரின் நிலைமை மிகவும் மோசமாயிற்று. அனைவரும் குருதேவரின் படுக்கையைச் சுற்றிலும் நின்று கொண்டனர். 11.15 மணிக்கு குருதேவர் மூன்று தடவை ஆழ்ந்த மூச்சு விட்டார். அப்பொழுது குருதேவரின் செவிகளில் ஸ்ரீசுவாமி சித்தானந்தஜி மகராஜ் உரக்க மூன்று தடவை 'ஓம்கார' ஒலியை எழுப்பினார். பிறகு குருதேவரின் முகம் எப்பொழுதும் போல பிரகாசித்து அடங்கியது. இந்தப் பூவுலகைவிட்டு குருதேவர் சென்று விட்டாலும் அவரது எண்ணற்ற சீடர்கள் மற்றும் பக்தர்களின் இதயங்களில் குருதேவர் இன்றும் தொடர்ந்து வாழ்ந்து கொண்டிருக்கிறார். உண்மையை நாடுபவர்களுக்கு 'ஞான ஒளி' யாக அவர் இன்றும் ஒளிவீசிக் கொண்டிருக்கிறார்.

# சிவானந்தருடன் ஒருநாள்

(குருதேவர் ஸ்ரீசுவாமி சிவானந்தரின் வாழ்க்கையை அற்புதமாகப் படம் பிடித்துக் காட்டும். 'வாழ்ந்து காட்டிய வள்ளல் சிவானந்தர்' என்ற நூலின் ஒரு பகுதி இது)

"இந்தக் காட்சி ஒரு பெரிய நகரின் ஹைகோர்ட்டைப்போலவோ அல்லது ஒரு சுறுசுறுப்பான துறைமுகத்தைப் போலவோ இருக்கிறது," என்று குருதேவர் தமது பக்தர்களுடன் அலுவலகத்தில் பணிபுரிந்ததைப் பற்றி ஜெர்மனியைச் சேர்ந்த பேராசியர் ஆர்.ஆர். ரீகர் என்பவர் தம் கருத்தைக் கூறுகிறார். குருதேவர் தம் அலுவலகத்தில் எந்த முறையில் சதாவதானியாக (பல செயல்களை ஒரே சமயத்தில் திறம்படச் செய்பவராக) திகழ்ந்தார் என்பது பற்றி அவர் அரிய விதத்தில் விளக்குகிறார்.

"ஒரே சமயத்தில் ஆயிரம் காரியங்களைக் கவனிக்க அவரால் முடிகிறது. பிரார்த்தனை கீர்த்தனத்துடன் அவர் தமது அலுவலகச் செயல்களைத் தொடங்குகிறார். பின் பல பைல்களில் கையெழுத்திடுகிறார். கடிதங்களைப் பார்வையிடுகிறார். ஆசிரம வரவு செலவுக் கணக்குப் பட்டியலை அக்கௌண்டன்ட் கொண்டு வந்து அவரிடம் காண்பிக்கிறார். காகிதம் மற்றும் தானியங்கி அச்சு இயந்திரம் வாங்கப் பணம் வேண்டும் என்று அச்சக மானேஜர் அவரிடம் விண்ணப்பிக்கிறார். கட்டடப் பொறுப்பில் உள்ள ஒரு வயதான சுவாமி ஆசிரமத்தில் புதிதாகக் கட்டி முடிக்கப்பட்ட ஒரு பெரிய விருந்தினர் விடுதியைத் திறந்து வைக்க வேண்டுமென்று அவரிடம் வேண்டிக் கொள்கிறார். இத்தனைக்கிடையில் செக்குகள் மற்றும் போஸ்டல் ஆர்டர்களில் குருதேவரின் கையெழுத்தை எப்பொழுது பெறலாம் என்று உரிய தருணத்தை எதிர்பார்த்து ஒரு மூலையில் காஷியர் காத்து நிற்கிறார். குருதேவருக்கு அருகில் ஒரு மேஜையில்

அன்று அனுப்பப்பட வேண்டிய புத்தகக் கட்டுக்கள் வரிசை வரிசையாக அடுக்கி வைக்கப்பட்டுள்ளன. அதை ஒவ்வொன்றாக எடுத்து குருதேவர் முகவரியைச் சரிபார்க்கிறார்.

இடையில் ஒரு பக்தரை ஏதாவது ஒரு நாமாவளி பாடுமாறு அவர் கேட்டுக் கொள்கிறார். சென்னைப் பல்கலைக்கழகத்திலிருந்து வந்திருக்கும் ஒரு பேராசிரியரைச் சில நிமிடங்கள் சொற்பொழிவாற்றுமாறு கேட்டுக் கொள்கிறார். சந்தடிமிக்க கடைத் தெருவைப் போல கையிலே பைல்கள், பேப்பர் கட்டுக்களுடன் அங்குமிங்கும் சீடர்கள் ஓடுகிறார்கள். பல டைப்ரைட்டிங் இயந்திரங்கள் டப்டப் என்று பெருத்த ஒலியை எழுப்பிக் கொண்டிருக்கின்றன. இளம் பிரம்மச்சாரிகள் கையில் டீ, காபி, பழம் மற்றும் பிஸ்கட் தட்டுக்களுடன் வந்திருப்போரை உபசரிக்கின்றனர். வெகு தூரத்திலிருந்து வந்துள்ள பக்தர்கள் குருதேவரை அணுகி ஆசீர்வாதம் பெறுவதற்கு முயலுகிறார்கள். ஹரித்வார், ரிஷிகேசில் உள்ள சாது மகாத்மாக்கள் தங்களது பத்ரி, கேதார் மற்றும் கயிலாய யாத்திரைக்குப் பண உதவி வேண்டி அவரிடம் விண்ணப்பம் செய்கின்றனர். ஒரு சீடர் தமக்கு மந்திரதீட்சை அளிக்க வேண்டுமென்று அவரிடம் கேட்க, மற்றொருவர் தமது புத்தகத்தில் குருதேவரின் கையெழுத்திற்காகப் பேனாவை அவரிடம் நீட்டுகிறார்.

தமக்கு ஒரு ஆண் குழந்தை பிறக்க அவர் ஆசீர்வாதம் செய்ய வேண்டுமென்று வெகுநாளாக குழந்தைப் பேறு அற்ற ஒரு பெண்மணி குருதேவரை நமஸ்கரித்து வேண்டுகிறாள். ஸத்ஸங்க அறைக்கு வெளியே குரங்குக்களும் நாய்களும் தங்களுக்குள் சண்டையிட்டுப் பெருத்த சத்தத்தை எழுப்புகின்றன.

டெல்லியிலிருந்து வந்துள்ள ஒரு மாணவர் குழுவிற்கு குருதேவர் வேதாந்தத்தைப் பற்றி சுருக்கமாக எடுத்துரைக்கிறார். ஒரு

மகாத்மாவை உத்தர காசி சென்று தீவிர தியானத்தில் ஈடுபடுமாறும், ஒரு இளைஞனை மலேசியா போய் ஆன்மீகத்தைப் பரப்புமாறும் அவர் கேட்டுக் கொள்கிறார்.

ஆசிரமவாசிகள் சிலரிடையே உள்ள தகராறை அவர் சுமுகமாகத் தீர்த்து வைக்கிறார். உடனே அங்கிருந்த ஒரு ஸ்டேஷன் மாஸ்டர் பக்கம் திரும்பி அண்மையில் நடந்த ஒரு ரயில் விபத்து பற்றி விசாரிக்கிறார். யமுனையின் வெள்ளச் சீரழிவைப் பற்றி பாசன எஞ்சினியர் எடுத்துக் கூறுகிறார். குஜராத்தில் உள்ள ஒரு டாக்டருக்கு கண் சிகிச்சை முகாம் நடத்துவது பற்றியும், கல்கத்தாவிலுள்ள ஒரு பக்தருக்கு அகில இந்திய தெய்வ நெறி மாநாட்டை ஏற்பாடு செய்யும்படியும் கடிதங்கள் எழுதுகிறார். ஒரு பெண் சீடரைப் பாட்டு ஒன்று பாடுமாறும், வாலிபர் ஒருவரை ஆசனம் செய்து காண்பிக்குமாறும் கேட்டுக் கொள்கிறார். தன்னைச்சுற்றி அமர்ந்திருப்பவர்களிடம் வேடிக்கையும் வினோதமுமாகப் பேசுகிறார். எல்லோரும் குலுங்கக் குலுங்கச் சிரிக்கிறார்கள். அவர்களுக்கு மாலைகளை எடுத்துக் கொடுக்கிறார். குருதேவரின் மேஜையின் மீது வகை வகையான பொருள்கள் வந்து குவிகின்றன. சுவிட்சர்லாந்திலிருந்து வந்திருக்கும் ஒரு பத்திரிகை நிருபர் மேல்நாட்டு மக்களுக்கு அறிவுரை வழங்குமாறு குருதேவரிடம் கேட்டுக் கொண்டு அதற்காகத் தம்மிடம் உள்ள டேப் ரிகார்டரைச் சரி செய்கிறார்.

திடீரென்று சுவாமிஜி தம் கடிகாரத்தைப் பார்க்கிறார். நேரம் ஆகிவிட்டது போலும், உடனே ஒரு சிறு பிரார்த்தனையுடன் அலுவலக வேலையை முடித்துவிட்டு எழுந்து தம் குடீருக்குத் திரும்ப முனைகிறார்.

ஆபீஸ் ரூமை விட்டு வெளியே வந்ததும் பஞ்சாபிலிருந்து வந்துள்ள ஒரு மாணவர் குழு குருதேவரின் பாதங்களில் விழுந்து வணங்குகின்றது. மிகுந்த மகிழ்ச்சியுடன் அவர் அவர்களை வரவேற்கிறார். அவருக்குப் பிடித்தமான 'Don't smoke Govinda...' என்ற பாடலை மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுக்கிறார். குருதேவருடன் மாணவர்கள் பல போட்டோப் படங்கள் எடுத்துக் கொள்கிறார்கள். குடிருக்குத் திரும்பும் வழியில் சுவர்க்காசிரமத்தில் உள்ள ஒரு நோயாளிக்குப் பால் கொடுக்க வேண்டும் என்றும், ரிஷிகேசத்தில் உள்ள ஒரு புற்று நோயாளிக்கு உடனடியாக ஒரு போர்வையை அனுப்ப வேண்டும் என்றும் தமது சீடர்களுக்கு உத்தரவிடுகிறார். இந்த முறையில் தம் குடிருக்குத் திரும்பும் வரையில் சுவாமிஜி ஒரு வினாடிப் பொழுதையும் வீணாக்காது பல செயல்களை ஒரே சமயத்தில் அற்புதமான முறையில் செய்து முடிக்கிறார்.

குருதேவருடன் ஒரு காலைப் பொழுதில் தாம் கண்டவற்றை மேற்கண்டவாறு அந்த பக்தர் நமக்கு அப்படியே படம் பிடித்துக் காட்டுகிறார். காலை அலுவல் நேரத்திற்குப் பின் எவராவது ஒரு பக்தர் நடத்தும் பாதபூஜை குருதேவரின் குடிரில் நிகழும். அடிக்கடி 'பண்டாரா' எனப்படும் பொது சிறப்பு விருந்து நடக்கும். அதில் குருதேவரும் அனைவருடனும் அமர்ந்து உட்கொள்வார். விருந்தின் போது அனைவரையும் உபசரித்த வண்ணம் வேடிக்கையாக வேதாந்தத்தைப் புகட்டுவார்.

ஆசிரமத்தில் இரவு ஸத்ஸங்கம், அலுவலக அறையில் நடந்த காலை சத்சங்கத்தைக் காட்டிலும் மிக நேர்த்தியானதாக இருக்கும். பாட்டு, நாடகம், மறைநூல்களிலிருந்து வாசித்தல், மகான்களின் உபன்யாசங்கள், பஜனை, கீர்த்தனம் போன்ற பல அம்சங்கள் இரவு சத்சங்கத்தில் இடம்பெறும், எந்த நிகழ்ச்சியாயிருந்தாலும் அங்கே குருதேவரின் சாந்நித்தியம்தான் அனைத்திலும் முக்கியமானது. அனைத்திலும் நடுநாயகம் அவரே.

# ஸத்ஸங்கத்தில் சிவானந்தர்

சிவானந்தாசிரமத்தில் இரவு ஸத்ஸங்கத்தில் பங்கு கொள்ளுவது என்பது அனைவருக்கும் ஒரு தனி ஆனந்தத்தை அளிக்கும். இன்றும் ஆசிரமத்தில் குருதேவர் இருந்த நாளைப் போலவே தினந்தோறும் ஸத்ஸங்கம் மிகச் சிறப்பாக நடைபெற்று வருகிறது. குருதேவர் தமது ஜீவிய காலத்தில் ஸத்ஸங்கத்திற்கு மிகுந்த முக்கியத்துவம் அளித்து வந்தார். ஒரு நாள் கூட அவர் ஸத்ஸங்கத்திற்கு வராமல் இருந்தது கிடையாது. உடல்நலம் குன்றி நடக்க முடியாத நிலையிலும்கூட சக்கர நாற்காலியில் அமர்ந்து வந்து ஸத்ஸங்கத்தில் பங்கு கொள்வார். ஸத்ஸங்க அறையில் அமரமுடியவில்லை என்றால் படுத்துக் கொள்வார். எந்த நிலையிலும் ஸத்ஸங்கத்தில் பங்கு கொண்டேயாக வேண்டும் என்று ஸத்ஸங்கத்தின் முக்கியத்துவத்தை மக்களுக்குத் தம் செயலால் புகட்டிய மாபெரும் மகாத்மா நம் குருதேவர்.

இதோ ஆசிரமத்தில் ஒரு நாள் நடந்த இரவு ஸத்ஸங்கத்தைப் பற்றிய ஒரு தத்ரூப வர்ணனை:

"1962–ம் வருடம் மே மாதம் 23–ம் தேதி புதன் கிழமை. சூரியன் அஸ்தமித்துவிட்டான். இன்னும் சந்திரரோதயம் ஆகவில்லை. ஆகா! ஆனந்த குடீரத்திலிருந்து ஒரு பேரொளி வெளிக்கிளம்புகிறதே, ஆமாம். குருதேவர் தமது குடீரத்தை விட்டு ஸத்ஸங்கத்தில் பங்கு கொள்வதற்காகக் கிளம்புகிறார். என்ன தேஜோமயமான சரீரம்! எப்பொழுதும் ஆனந்தமயமான வதனம். குழந்தையைப் போன்ற களங்கமற்ற சிரிப்பு. கங்கையை ஒட்டிய அவரது குடீரிலிருந்து அவர் கிளம்பும் காட்சியைக் கண்டு ஆனந்திக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் குடீரை ஒட்டிய ரோட்டுப் பகுதியில் தயாராக ஒரு பக்தர் கூட்டம் வெகு நேரம் காத்து நிற்கிறது. குருதேவரைக் கண்டவுடன்

அந்தக் குழுவிலுள்ள அனைவரும் கரம் குவித்து குருதேவரை நமஸ்கரிக்கின்றார்கள். திருத்தணியிலிருந்து வந்துள்ள பக்தர் குழாத்தினர் 'முருகா,முருகா' என்று குரல் எழுப்புகின்றனர். அதை அன்புடன் ஏற்றுக் கொள்ளும் விதத்தில குருதேவரும் 'முருகா, முருகா' ஓம் சரவண பவாய நம' என்று மெய்மறந்து கூறுகிறார்.

இரு புறத்திலும் இரண்டு சீடர்கள் தாங்கிப் பிடிக்க குருதேவர் மெதுவாகச் சாலையில் நடக்கிறார். பக்தர் கூட்டமும் பின் தொடர்கிறது. வைர விழா அறைக்கு முன்புறம் உள்ள திறந்தவெளி அரங்கில் ஹார்மோனியம், தபலாவுடன் கூடிய கீர்த்தனம் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. நல்ல ஒளி விளக்குகள் போடப்பட்டு அந்த இடம் ஒளிமயமாகத் திகழ்கிறது. பார்வையாளர்கள், பக்தர்கள், ஆசிரமவாசிகள் போன்ற பலரும் அங்கே அமர்ந்திருக்கின்றனர். ஒருபுறம் பெண்கள், மறுபுறம் ஆண்கள்.

கீழே கங்கை நதி அமைதியாக ஓடிக் கொண்டிருக்கிறது. கண்களை மூடி மனத்தை ஒருமைப்படுத்தினால் அதிலிருந்து ஓங்கார நாதம் எழுவதைக் கேட்கலாம். எதிர்க்கரையில் உள்ள கீதாபவனம், சுவர்க்காசிரமத்திலிருந்து ஆலய மணி டாண், டாண் என்று ஒலிக்கிறது. பின்புறம் இமயமலை ஓங்கி உயர்ந்து நிற்கிறது. என்ன கம்பீரமான தோற்றம்! இரவு நேரத்தில் அது காட்டும் கருமை நிறம் நமக்குக் கறுப்பு நிறக் கண்ணனை நினைவூட்டுகிறது. ஆனந்த குடீரத்தின் ஆனந்த ஊற்றாகிய குருதேவர் அனைவரிடத்தும் குதூகலமாகப் பேசிக் கொண்டே ஸத்ஸங்க இடத்தை அடைகிறார்.

தமக்கென்று போடப்பட்டிருக்கும் ஒரு சாய்வு நாற்காலியில் குரு தேவர் அமர்கிறார். அங்கிருந்து அவர் அனைவரையும், அனைவரும் அவரையும் காண முடியும். அவருக்கு நேர் எதிர்புறத்தில் அலங்கரிக்கப்பட்ட கிருஷ்ண பகவானின் படம் வைக்கப்பட்டிருக்கிறது.

ஆசிரம சன்னியாசி ஒருவர் ஸ்ரீசூக்தத்தை முதலில் பாராயணம் செய்கிறார். பக்தர்கள் குருதேவரின் பாதங்களில் ரூபாய் நோட்டுக்களைக் காணிக்கையாக சமர்ப்பித்து விட்டு தங்கள் இடங்களில் சென்று அமர்கின்றனர். ஆசிரமத்தில் மகாலக்ஷ்மியின் அருள் நிரம்பி இருக்கிறது.

ஸ்ரீசூக்த பாராயணத்திற்கு பின், குருதேவர் சுப்பாராவ் என்ற கண் பார்வையற்ற ஒரு கீதைப் பேரறிஞரைப் பேசுவதற்காக அழைக்கிறார். அவரும் ஒரு சில கீதாசுலோகங்களைச் சொல்லி விளக்கம் சொல்கிறார். அதற்குப் பிறகு ரேடியோப் பாடகரான பால் என்பவரை பாடுமாறு கேட்டுக் கொள்கிறார். அவர் துளசிதாசரின் பஜனைப் பாடல் ஒன்றை மிக இனிமையான குரலில் பாடுகிறார். அப்பொழுது ஒரு பக்தர் குருதேவருக்கு அருகில் வந்து அவரது பாதங்களைத் தொட முனைகிறார். "தொந்தரவு செய்ய வேண்டாம். மெதுவாக, மெதுவாக" என்று குருதேவர் அந்த அன்பரிடம் கூறுகிறார். பல வருடங்கள் இடைவிடாது செய்த கடும் தவத்தால் குருதேவரது உடல் கொஞ்சம் அழுத்தினாலும் மிகுந்த வலி கண்டது.

இரவு ஸத்ஸங்கத்தில் ஆசிரமத்தில் பொதுவாக ஞாயிற்றுக் கிழமைகளில் சூரிய பகவானும், திங்களில் சிவபிரானும், செவ்வாயன்று குமரப் பெருமானும், புதனன்று கிருஷ்ணரும், வியாழனன்று தத்தாத்ரேயரும், வெள்ளியன்று தேவியும், சனியன்று ஹனுமாரும் விசேஷமாக வழிபடப்பட்டனர். ஸ்ரீராமநவமி, ஸ்ரீகிருஷ்ணஜயந்தி, கிறிஸ்துமஸ், நவராத்திரி போன்ற விசேஷ தினங்களில் அந்தந்த மூர்த்திகளுக்கு சிறப்பு வழிபாடு நடக்கும்.

ஒரு அயல் நாட்டவர் வந்தார். குருதேவர் அவரை, 'ஓம் நமோ நாராயணாய' என்று சொல்லி வரவேற்றார்.

"எங்கிருந்து வருகிறீர்கள்?"

'வியன்னாவிலிருந்து', என்றார் அந்த அன்பர். உடனே அவருக்குப் புத்தகங்கள் மற்றும் பத்திரிகைகளைக் குருதேவர் கொடுத்தார்.

இதற்குள் பால் துளசிதாஸ் பஜனையைப் பாடி முடித்தார். அதையடுத்துக் கீர்த்தனம், ஆரத்திக்குப்பின் பிரஸாதம் வழங்கப்பட்டது. குருதேவரிடமிருந்து நேரடியாகப் பிரஸாதத்தைப் பெறுவதற்காக இப்பொழுது பலர் அவரைச் சூழ்ந்து கொள்கின்றனர். அவர்களில் ஒருவர் ஒரு தத்துவப் பேராசிரியர். 'சங்கரருக்குச் சமமான மேனாட்டு ஞானிகள் உண்டா?' என்று அவரிடம் குருதேவர் கேட்டார். அவர் சிறிது ஆலோசிக்கவும் குருதேவரே, 'எக்கார்ட், இல்லையா! சில கிறிஸ்தவ தத்துவவாதிகளும் உண்டு' என்று பதில் சொல்லி விட்டு 'நீங்கள் இதற்குள் துறைத் தலைவராகியிருக்க வேண்டும், சனிக்கு எதிர் வீட்டில் பிருஹஸ்பதி இருக்கிறார் போலும்' என்று வேடிக்கையாகக் குறிப்பிட்டார். இது வெறும் வேடிக்கை அல்ல. ஜாதகங்களையும், கைரேகையையும் நம்பிக் காலத்தை வீணாக்கும் நபர்களுக்குக் குருதேவர் இங்கு ஒரு பாடம் புகட்டுகிறார்.

அடுத்து ஒரு ஸமஸ்கிருதப் பேராசிரியரின் மீது குருதேவரின் பார்வை பட்டது. அவர் குவாலியரிலிருந்து வந்திருந்தார். குருதேவருடைய பிரம்மச்சரியம் பற்றிய புத்தகம் தன்னை எவ்வாறு மாற்றியமைத்தது என்பதை அவர் எடுத்துக் கூறினார். உடனே குருதேவர் ஆசிரமத்தின் புதிய வெளியீடான 'மனத்தை அடக்குதல்' என்ற ஆங்கில நூலை அவருக்கு அளித்தார். தம்மிடம் ஆராய்ச்சி செய்யும் ஒரு பி.எச்.டி. மாணவருக்கு அது மிகவும் உதவும் என்று கூறி அவர் அதைப் பெற்றுக் கொண்டார்.

'நீங்கள் எனது பேராசிரியரா அல்லது மாணவரா?' குருதேவர் அவரைப் பார்த்துக் கேட்டார்.

'நீங்கள்தான் எனக்குப் பேராசிரியர். நான் உங்கள் மாணவன்' என்று பேராசிரியர் கூறினார்.

'நீங்கள் துறைத் தலைவர் இல்லையா?'

'அங்கே, இங்கு அல்ல!'

குருதேவர் எழுந்து விட்டார். உடனே பக்தர்கள் ஒதுங்கி நின்று அவருக்குப் போவதற்கு வழி விட்டனர். அப்பொழுது ஒரு அன்பர் 'சிந்தையை அடக்கியே சும்மா இருக்கும் திறம் அரிது' என்று தாயுமானவரின் ஒரு சில வரிகளைச் சொன்னார். அதைக் கேட்ட குருதேவர், "அது சரிதான். அமைதியாக இருங்கள். ஆனால் உங்கள் கைகள் வேலை செய்து கொண்டிருக்கட்டும். மனத்தைக் கடவுளிடமும், கைகளை வேலையிடத்தும் கொடுங்கள். 'முக மேம் ராம் – கர் மேம் காம்' – நாவில் அவன் நாமம், கையில் நம் வேலை. உள்ளே அமைதி வெளியே செயல், உலக நாடகத்தைச் சாட்சியாகப் பார்த்துக் கொண்டிருங்கள்", என்று அறிவுரை கூறினார்.

மெதுவாகப் பிரார்த்தனை சுலோகங்களை வாயில் முணுமுணுத்தவாறே குருதேவர் தமது குடிலை நோக்கி நடக்கிறார். குடிலின் வாயில் வரை பக்தர்கள் அவரைப் பின் தொடர்கின்றனர். தமது குடிலின் வாயிலில் நின்று கொண்டு குருதேவர் அனைவரையும் நோக்கிக் கரம் குவித்து நமஸ்காரம் செய்கிறார். பல்வேறு சமயங்களின் மறை நூல்களிலிருந்து சில பகுதிகளைப் பிரார்த்தனையாகச் சொல்லுகிறார். அனைவரும் அவரை வணங்குகின்றனர். குருதேவர் தமது குடிலுக்குள் நுழைகிறார். அப்பொழுது அவரது மனமானது நடந்த அனைத்து நிகழ்ச்சிகளிலிருந்தும் விடுபட்டு அந்தர்முகமாயிற்று என்பதை அவரது முகத் தோற்றம் எடுத்துக் காட்டியது. அமைதி, அமைதி, இறைவனுடன் ஒன்றித்த பேரானந்தம்.

குருதேவர் பாடிய கீர்த்தனங்களில் சில

இரவு ஸத்ஸங்கத்தில் மற்ற எல்லா நிகழ்ச்சிகளுக்கும் பிறகு குருதேவர் ஒரு சில கீர்த்தனங்களைப் பாடி விட்டு மஹா மந்திரம், மஹா ம்ருத்யுஞ்ஜய மந்திரம், சாந்தி பாடத்துடன் ஸத்ஸங்கத்தை நிறைவு செய்வார்.

சிறந்த ஆன்மீகக் கருத்துக்களைக் கொண்ட சில கீர்த்தனங்கள் அவருக்கு மிகவும் பிடித்தவை. அவற்றில் ஒரு சில கீழே தரப்படுகின்றன.

Serve Love Give Purify Meditate Realise
Be good Do good Be kind Be compassionate
Enquire 'who am I?' Know thy Self and be free.
Adapt Adjust Accommodate
Bear insult, Bear injury, highest sadhana

* * *

ஸ்ரீராம் ஜய ராம் ஜய ஜய ராம்
ஸ்ரீராம் ஜய ராம் ஜய ஜய ராம்

Excel in service
Expand in love
Advance in knowledge
This is Synthetic Yoga

* * *

Start the day with God
End the Day with God
Fill the day with God
Live the day with God,

'Song of A little','Song of Eighteen ities' என்ற ஆங்கிலப் பாடல்களையும் அவர் அடிக்கடி பாடுவார்.

## THE SONG OF A LITTLE

ஹரே ராம ஹரே ராம
ராம ராம ஹரே ஹரே
ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண
கிருஷ்ண கிருஷ்ண ஹரே ஹரே



Eat a little, drink a little
Talk a little, sleep a little
Do asan a little, pranayam a little
Do vichar a little, meditate a little
(ஹரே ராம.....)

## SONG OF EIGHTEEN 'ITIES

Serenity, regularity, absence of vanity
Sincerity, simplicity, veracity,
Equanimity, fixity, non-irritability
Adaptability, humility, tenacity,
Integrity, nobility, magnanimity,
Charity, generosity, purity
Practise daily these eighteen ities.
You will soon attain Immortality.
You will behold Unity in diversity
You can not attain this in the University
Sri Ram Jaya Ram Jaya Jaya Ram.
Sri Ram Jaya Ram Jaya Jaya Ram.

# ஸ்ரீ சுவாமி தேவானந்தா

## (வாழ்க்கைச் சுருக்கம்)



ஸ்ரீ சுவாமி தேவானந்தா 1937 ஈசுவர வருடத்தில் ஜேஷ்ட சுக்லபட்ச ஏகாதசி தினத்தன்று அவதரித்தார். சிறுவயதிலேயே அவர் தமது குடும்பத்தை விட்டு ஆந்திரப்பிரதேசத்தில் உள்ள ஸ்ரீபிரம்மானந்த ஆசிரமத்தில் சேர்ந்தார். 1954ல் ஸன்யாஸ தீட்சை டெற்றார். சிறிது காலம் திருப்பதிக்கருகில் உள்ள ஸ்ரீவியாஸாச்ரமத்தில் இருந்துவிட்டு பிறகு 1956ல் ரிஷிகேசம் சிவானந்தாசிரமத்தை அடைந்தார்.

குருதேவர் ஸ்ரீசுவாமி சிவானந்த ஸரஸ்வதி மகாராஜூக்கு அருகில் இருந்து கொண்டு தம் உடல், பொருள், ஆவியால் அவருக்கு அருந்தொண்டு செய்தார். குருதேவர் இவரை அன்புடன் சின்ன ஸ்வாமி என்று அழைத்தார். தமது தாய்மொழியான தெலுங்கில் குருதேவரது 20க்கும் அதிகமான ஆங்கில நூல்களை இவர் மொழிபெயர்த்திருக்கிறார்.

ஸ்ரீசுவாமி தேவானந்தர் ஒரு இலட்சிய சீடர், சாதகர், ஸன்யாஸி. தமது இனிய கணீரென்ற குரலில் பஜனை செய்து மக்கள் மனதில் பக்தியை ஊட்டி வருகிறார். இன்றும் சிவானந்தாசிரமத்தில் குருதேவர் வாழ்ந்த புனித ஆனந்த குடீரத்தில் அவர் தினமும் மாலையில் தமது திவ்ய நாம பஜனையால் பக்தர்களைப் பரவசத்தில் ஆழ்த்துகிறார். தெய்வீக வாழ்க்கைச் சங்க மாநாடுகளில் பங்கேற்றும் மற்றும் பாரதத்தின் பல மாநிலங்களில் சுற்றுப்பயணம் செய்தும் சுவாமிஜி கீர்த்தனை, பஜனையின் மூலம் குருதேவரின் கொள்கைகளைப் பரப்பி வருகிறார்.

இந்தச் சிறிய நூலில் சுவாமிஜி அவர்கள் குருதேவரின் பூவுலக வாழ்வின் அந்திம நாட்களில் அவருடன் தாம் பெற்ற அரிய அனுபவத்தை அற்புதமான முறையில் படம் பிடித்துக் காட்டியுள்ளார்.